# மேற்றிராணியரல்லாத வேதசாட்சிகள் பலர் பெயரால் - பொது

## Sapientiam Sanctorum

**பிரவேசம்: சங். 44: 15,14**

பரிசுத்தவான்களுடைய ஞானத்தை மக்கள் வெளிப்படுத்துவார்கள். சங்கத்தார் அவர்களுடைய புகழ்ச்சியைக் கூறுவார்கள். அவர்களுடைய நாமங்கள் தலைமுறை தலைமுறையாய் நிலைத்திருக்கும். (சங். 32. 1) நீதிமான்களே, ஆண்டவரிடத்தில் அகமகிழ்ச்சியுடன் அவரை கீர்த்தனஞ் செய்யுங்கள். அவரை புகழ்வது இருதய நேர்மையுள்ளவர்களுக்குரியது.. – பிதாவுக்கும். . .

**சபைச் செபம்**

செபிப்போமாக: சர்வேசுரா, தேரீருடைய பரிசுத்த வேதசாட்சிகளாகிய (இன்னார் இன்னாருடைய..) பரலோக பிறப்புநாளை கொண்டாட எங்களுக்கு கிருபை செய்தருளினீரே. நாங்களும் அவர்களுடைய கூட்டுறவைப் பெற்று, நித்திய பேரின்ப பாக்கியத்தில் களிகூர எங்களுக்கு திருவுளம் புரிந்தருளும். - தேவரீரோடு இஸ்பிரித்துசாந்துவின் ஐக்கியத்தில் . . .

**நிருபம்**

**ஞானாகமத்திலிருந்து வாசகம்** (ஞானா. 5. 16-20)

நீதிமான்கள் என்றென்றைக்கும் சீவிப்பார்கள். கர்த்தரிடத்தில் அவர்களுக்குச் சம்பாவனையுண்டு அதி உன்னத கடவுள் அவர்களை என்றும் பாதுகாக்கிறார். ஆகையால் ஆச்சரியமான ராசாங்கத்தையும் மகிமையின் கிரீடத்தையும் கர்த்தர் கரங்களினின்றடைவார்கள். அவருடைய வலது கரம் அவர்களை காப்பாற்றியது அவரது பரிசுத்த புஜம் அவர்களை ஆதரித்தது. அவர் பற்றுதலானது ஆயுதமணிந்து கொள்ளும். அவர் சத்துராதிகளைப் பழி வாங்குவதற்குச் சிருஷ்டிகளுக்காக ஆயுதமணிவார். இருப்புக் கவசமாக நீதியையும் சிரசாயுதமாக தமது நேர்மையுள்ள தீர்மானத்தையும் தரித்துக் கொள்ளுவார். ஊடுருவப்படாத கேடயமாக நீதித்தனத்தால் தம்மை மூடிக்கொள்வார்.

**படிக்கீதம்**: (சங். 125. 5-6)

வேடர்களின் கண்ணிக்கு குருவி தப்பினதுபோல, நம்முடைய ஆத்துமம் தப்பிற்று. – கண்ணி தெறித்துப் போயிற்று. நாமோ விடுதலையானோம்.

பரலோகத்தையும் பூலோகத்தையும் படைத்த ஆண்டவருடைய நாமத்தினால் நமக்கு சகாயமுண்டாயிருக்கிறது.

**அல்லேலுய்யா கீதம்**

அல்லேலுய்யா, அல்லேலுய்யா (சங். 67. 4) நீதிமான் சர்வேசுரன் சமூகத்தில் விருந்து செய்து திருப்தி அடைந்து அகமகிழ்வார்கள். ஆனந்த அக்களிப்படை வார்கள். அல்லேலுய்யா

*சப்தரிகை ஞாயிறுக்குப்பின் அல்லேலுய்யா கீதத்தை விட்டுவிட்டு கீழேயுள்ளதைச் சொல்ல வேண்டும்*

**நெடுங்கீதம்:** (சங். 125. 5-6)

கண்ணீருடன் விதைக்கிறவன் சந்தோஷத்துடன் அறுப்பார்கள். அவர்கள் விதைகளை தெளிக்கையில் அழுதுகொண்டு போனார்கள். ஆனால், தாங்கள் அறுத்த அரிக்கட்டுகளை சுமந்துகொண்டு வருகையில் பெருமகிழ்ச்சியோடு வருவார்கள்.

**சுவிஷேசம்** (லூக். 6. 17-23)

அக்காலத்தில் சேசுநாதர் மலையினின்று இறங்கி, மைதானமான ஓரிடத்திலே நின்றார். அங்கே அவருடைய சீஷர் கூட்டமும், யூதேயா நாட்டின் எத்திசை யிலிருந்தும், ஜெருசலேம் நகரத்திலிருந் தும், தீர், சீதோன் நகரங்களின் கடற் கரைகளிலிருந்தும் வந்த ஏராளமான ஜனங்களும் இருந்தார்கள். இவர்கள் அவருடைய வாக்கைக் கேட்கவும், தங்கள் நோய்களினின்று சுகமாக்கப்படவும் வந்திருந்தார்கள். அசுத்த அரூபிகளால் உபாதிக்கப்பட்டவர்களும் சொஸ்த மானார்கள். அவரிடத்திலிருந்து ஒரு சக்தி புறப்பட்டு, எல்லோரையும் குணமாக் கினபடியினாலே, ஜனங்களெல்லோரும் அவரைத் தொடும்படி வழிதேடிக் கொண்டிருந்தார்கள். அப்போது அவர் தம்முடைய சீஷர்கள்மேல் தமது கண்களை ஏறெடுத்துப் பார்த்துத் திருவுளம்பற்றினதாவது: தரித்திரர்களே, நீங்கள் பாக்கியவான்கள் ஏனெனில் சர்வேசுரனுடைய இராச்சியம் உங்களு டையது. இப்பொழுது பசியாயிருக்கிறவர்களே, நீங்கள் பாக்கியவான்கள் ஏனெனில் திருப்தியடைவீர்கள். இப்பொழுது அழுகிறவர்களே, நீங்கள் பாக்கியவான்கள் ஏனெனில் சிரிப்பீர்கள். மனுமகனைப்பற்றி ஜனங்கள் உங்க ளைப் பகைத்து, உங்களை விலக்கித் தூஷணித்து உங்கள் பெயரை ஆகா தென்று தள்ளும்போது, நீங்கள் பாக்கியவான்களாயிருப்பீர்கள். அந்நாளிலே அகமகிழ்ந்து களி கூறுங்கள். ஏனெனில் இதோ, பரலோகத்திலே உங்கள் சம்பாவனை ஏராளமாயிருக்கின்றது.

**ஒப்புக்கொடுத்தல்** (சங். 149. 5-6)

பரிசுத்தவான்கள் மகிமையில் அக்களிப்பார்கள். தங்கள் மஞ்சங்களில் களிகூறுவார்கள். அவர்களுடைய வாயில் சர்வேசுரனுடைய துதிகள் விளங்கும். (பா. கா. அல்லேலுய்யா)

**அமைதி மன்றாட்டு**

ஆண்டவரே, எங்களுடைய பக்தியின் காணிக்கையை தேவரீருக்கு ஒப்புக் கொடுக்கிறோம். அவை தேவரீருடைய நீதிமான்களின் மகிமையின் பொருட்டு உமக்கு பிரியமுள்ளவனவாகவும், உம்முடைய இரக்கத்தினால் எங்கள் இரட்சணியத்துக்குரியனவாகவுங் கடவன – தேவரீரோடு ….

**உட்கொள்ளுதல்** (லூக். 12. 4)

உங்களை துன்புறுத்திகிறவர்களைப் பற்றி அஞ்சாதீர்கள் என்று என் சிநேகி தராகிய உங்களுக்கு சொல்லுகிறேன். (பா. கா. அல்லேலுய்யா)

**உட்கொண்ட பின்**

செபிப்போமாக: ஆண்டவரே தேவரீருடைய பரிசுத்த வேதசாட்சிகளாகிய (இன்னார் இன்னாருடைய..) வேண்டுதலினால் நாங்கள் வாயால் உட்கொண் டதைச் சுத்தமான இருதயத்தினால் கிரகிக்குமாறு எங்களுக்கு திருவருள் புரிந்தருளத் தேவரீரை மன்றாடுகிறோம்.. – தேவரீரோடு …